# ஸ்ரீ விநாயக சதுர்த்தி பூஜாகல்ப

[ மூன்றாம் பதிப்பு ]



" மாம்பலம் குருகுல வெளியீடு "

ஆசிரியர், ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா.

லவங்க ஆனிமீ] 1961. [விலை 37 ந

உ

# ஸ்ரீ விநாயக சதுர்த்தி

திதிகள் 15. அமாவாஸ்யை கழித்த ப்ரதமைமுதல் பௌர்ணமி வரை சுக்லபக்ஷம். அதற்கடுத்த ப்ரதமை முதல் அமாவாஸ்யை வரை க்ருஷ்ணபக்ஷ திதிகளாகும். சில வ்ரதங்கள் திதியைப் பின்பற்றியும், சில நக்ஷத்திரங்களைக்கொண்டும், சில வாரத்தைக் கொண்டும் தோன்றினவை. யம த்விதியை, அக்ஷய த்ரிதியை, விநாயக சதுர்த்தி, ரிஷி பஞ்சமி, ஸ்கந்த ஷஷ்டி, ரத ஸப்தமி, ஜன்மாஷ்டமி, ஸ்ரீ ராம நவமி, விஜய தசமி, வைகுண்ட ஏகாதசி, ச்ரவண த்வாதசி, க்ருஷ்ணங்கார த்ரயோதசி, நரக சதுர்த்தசி, சித்ரா பௌர்ணமி முதலியவை திதி வ்ரதங்களாம். விநாயக சதுர்த்தி வ்ரதம் காசி முதல் கன்யாகுமரி வரை கொண்டாடப்படுகிறது. மஹாராஷ்ட்ர தேசத்தில் விநாயக சதுர்த்தி மிக விமரிசையாய் 10 நாள் கொண்டாடப்படுகிறது. விநாயக சதுர்த்தி வ்ரதத்தை ஆரம்பித்து, ஒவ்வொரு மாதமும் சதுர்த்தி பூஜை செய்து, சதுர்த்தி வ்ரத உத்யாபனம் செய்வது நம் நாட்டு வழக்கம். பலவிதமான ஸித்திகளைத் தருவதால், பலரும் இதைக் கொண்டாடுவர். எந்த சுபமான கார்யத்தை ஆரம்பித்தாலும் முதலில் விநாயக பூஜை செய்கிறோம். இவ்விநாயகரைச் சாணியினாலும், சந்தணத்தாலும், மஞ்சளாலும், வெல்லத்தாலும். களி மண்ணினாலும், வெள்ளெருக்கின் வேரினாலும், மற்ற லோஹங்களாலும் செய்கிறோம். விநாயகர் இல்லாத சிவாலயத்தைக் காணமுடியாது. சில விஷ்ணு ஆலயங்களிலுங்கூட திருநாமத்துடன் விநாயகரைக் காணலாம், விநாயகரைப் பற்றி கூருத புராணமில்லை. சில அச்வத்த மரத்தின் அடியிலும் இவரைத் தர்சிக்கலாம். சுருங்கச் சொல்லின் மற்ற தேவதைகளைவிட, விநாயகரே விசேஷமாக கொண்டாடப்படுகிறார்.

## வேத விநாயக தத்வம்.

வேதம் இவரை "ஜ்யேஷ்ட ராஜன்" என்றும் "ப்ரும் மணஸ்பதி" என்றும் அழைக்கின்றது. "ஜ்யேஷ்ட" என்ற சொல் முதலில் உதித்தவர் என்றும், "ப்ரும்மணஸ்பதி" எனில் வேதத்திற்குத் தலைவன் என்றும் பொருள். அதர்வசிரஸ் இவரே பரமாத்மா என்கிறது. திருக்குறள் முதல் பாட்டு இவரது ஸ்வரூபத்தை சிறப்பாக எடுத்துக் காட்டுகிறது. "அ" என்பது எழுத்துக்களுக் கெல்லாம் முதலானதுபோல் உலகிற்கெலாம் ஆதிபகவானே முதல் என்று கருத்து வாய்ந்த அந்த குறள், நிர்குணனுகவும், ஸகுணனுகவும், அக்ஷரமாகவும், க்ஷரமாகவும், உள்ள முழுமுதற் கடவுள் விநாயகர் என எடுத்துக்காட்டுகிறது. "அ" எனும் எழுத்தின்றி வேறெந்த எழுத்தும் எப்படி ஒலிக்காதோ அங்ஙனமே விநாயகரின்றி வேறு தெய்வ பூஜை இல்லை. ஸ்ரீ வைஷ்ணவர்களும் "விஷ்வக்ஸேநர்" என்ற பெயருடன் இவரைப் பூஜிக்கின்றனர்.

நமது உடலில் கூறப்படும் மூலாதாரம், ஸ்வாதிஷ் டானம், மணிபூரகம், விசுத்தி, அநாஹதம், ஆக்ஞை என்ற ஆறு ஆதாரங்களில் மூலாதாரமாக உள்ளவர் இவர். யோக சாஸ்த்ரம் ப்ரணவ நாத ரூபியாய் இவரைக் கூறுகிறது. ப்ரணவத்திற்கு அகாரமும், உகா ரமும், மகாரமும் சேருதல் வேண்டும். ப்ராணிகளது முதல் நாதம் அகாரமாம். குழந்தைகள் "அம்மா, அப்பா, அக்கா" என அகாரத்தை முன்னிட்ட பதங்களையே முதலில் கூறுகின்றன. கன்றும் மாடும் 'அம்மே' என்றே கத்துகின்றன. யானையினது ஒலியோ ப்ரணவ ஒலிபோலாம். ஓங்கார ரூபி கஜமுகன். விநாயகரது முகம் எங்கும் யானை முகமே. சிதம்பர க்ஷேத்திரத்தில் தெற்கு வீதியிலுள்ள கணபதியே நரமுக கணபதியாகக் காணப்படுகிருர். யானை, ப்ராணிகளில் மிகப் பெரிய உரு அமைந்தது. ப்ரும்ம என்ற சொல் "பெரியதாயுள்ளது, எங்கும் நிறைந்தது" என்ற பொருள் கொண்டதாம். எல்லாவற்றையும் தனக்குள்ளே அடக்கிக்கொண்டவர் பரமாத்மா. அவர் மண்ணுய், விண்ணுய், எல்லாமாக இருப்பவர். இந்த உண்மையை ஊனக் கண்ணுக்குக் [illegible]ண்பிக்கவே விநாயகர் யானை, முகமாகவும், பெரிய

உதரமுள்ளவராகவும் உருகொண்டு அமைக்கப்படுகிறார். விநாயகர் எனில் தனக்குமேல் நாயகர் இல்லாதவரென்று பொருள். இவை யெல்லாம் அநாதியாய். முழுமுதற் கடவுளாய் உள்ளவர் இவர் என விளக்குகின்றன. மஞ்சள், சாணி, சந்தனம், மண், வெல்லம் முதலிய எல்லா பொருள்களாலும் இவரை அமைப்பதும், விநாயக பூஜையில் உபயோகிக்கப்படும் பூமியிலுண்டான ஸகலவிதமான புஷ்பங்களும் பத்ரங்களும் (இலைகளும்) பழங்களும், பக்ஷயங்களும் இவர் ஓங்கார சப்தத்தால் கூறப்படும் பரமாத்மா என எண்பிக்கின்றன. வேதம், உபநிஷத் அனைத்தும் இவர் எங்கும் நிறைந்த எல்லாமாய் அமைந்த ஓங்கார வாச்யனான பரமாத்மா என எடுத்துக் காட்டுகின்றன.

## புராண விநாயகர் கதை.

வேதம் வகுத்த தத்துவத்தை விளக்கிக் கூறவந்தவை புராணங்கள். விநாயகரை ஸகுணமாக வர்ணித்து அவர் அவதாரத்தையும், லீலையையும் விஸ்தாரமாக 18 புராணங்களும் கூறினாலும், விநாயகபுராணம் அல்லது பார்க்கவ புராணம், முத்கல புராணம் இவை இரண்டும் பூர்ணமாக விநாயகரைப் பற்றியே வர்ணிக்கின்றன. இவரது உலகம் ஆனந்த புவனம் எனப்படும். இது கைலாஸத்தின் அருகே உளது. ஆங்கு ஸித்தி, புத்தி என்ற இரு மனைவிகளுடனிருந்து மும்மூர்த்திகள் மூலம் உலகைப் படைத்து, பரிபாலித்து ஒடுக்குகிறார். பக்தர்களை ரக்ஷிக்கப் பலரிடம் பல அவதாரம் செய்கிறார். பார்க்கவ புராணத்தில், இளையவனான தனது தம்பி குமரனுக்குத் தன் தத்துவத்தை விநாயகரே வர்ணிக்கிறார். அதில் 12 அவதாரங்கள் கூறப்பட்டன. [தமிழில் விநாயக புராணம் ரூ. 2—50. குருகுலவெளியீடு.]

1. **வக்ர துண்ட கணபதி:** இவரே முதலில் உருவெடுத்து ஸித்தி, புத்தி என்ற இரு மனைவிகளை மணந்து மும்மூர்த்திகளைப் படைத்து, அவர்களுக்கு சதுர்த்தி வ்ருதத்தை உபதேசித்து சக்தி அளித்தவர்.

2. **சிந்தாமணி கணபதி:** அபிஜித் எனும் அரசன் மூலம் குணவதி என்பவளிடம் அவதரித்து, சிந்தாமணியைத் தந்தைக்குத் தந்தார்.

3. **கஜானன கணபதி:** பார்வதி பரமேச்வரரிடம் அவதாரம் செய்து, கஜாஸுரனைக் கொன்ருர். விநாயக சதுர்த்தியில் இவருடைய அவதாரம்.

4. **விக்ன விநாயகர்:** வரேண்யன், புஷ்பவதி என்ற தம்பதிகளிடம் தோன்றி விக்னங்களை அகற்றினர்.

5. **மயூரேச கணபதி:** ஸங்கடஹர சதுர்த்தி வ்ருதம் செய்த பார்வதீ பரமேச்வரரிடம் அவதரித்து, ப்ரும்ம புத்ரிகளான ஸித்தி, புத்திகளை மணந்தார். மயில் வடிவனை ஸிந்து எனும் அஸுரனை ஜயித்து, அவனை வாஹனமாகக்கொண்டு மயூரேசன் என அழைக்கப்படுகிருர்.

6. **பாலசந்த்ரர்:** அநலன் எனும் அஸுரனை அடக்க ஸகல தேவரும் விநாயகரை வேண்ட, அவர் ப்ரும்மசாரியாக வந்து அவனை விழுங்கினர். அந்த தாபம் அகல, மிகச் சீதளமான சந்த்ரனை நெற்றியில் வைத்துப் பால சந்த்ரர் எனப்படுகிருர்.

7. **தூமகேது:** புகை வடிவனை அஸுரனைக் கொல்ல மாதவன், ஸுமுதா என்ற ராஜ தம்பதிகளிடம் தோன்றி புகையால் அவனைக் கொன்று தூமகேது என அழைக்கப்படுகிருர்.

8. **கணேசர்:** பலி எனும் அரக்கனைக் கொல்லும்படி அமரர் அனைவரும் வேண்ட, கணங்களுடன் சேர்ந்து வந்து அவனை வென்ருர். ஆதலின் கணேசர் எனப்படுகிருர்.

9. **கணபதி:** கஜாஸுரனைக் கொல்ல பார்வதி பரமேஶ்வரர்கள் சித்ரத்தில் உள்ள யானை தம்பதிகளைப் பார்க்கும்போது அங்கிருந்து அவதரித்தவர்.

10. **மதோத்கடர்:** அதிதியிடம் கச்யபர் ப்ரார்த்தனையால் அவதரித்து தேவாந்தக நராந்தகர்களைக் கொன்ருர்.

11. **டுண்டு கணபதி:** காசியில் விளங்கும் மூர்த்தி. துராஸதன் என்ற அரக்கனைக்கொல்ல உமை சிவமுகத்திலிருந்து ஐந்து முக கணபதியைப் படைத்தாள். நாகப்பட்டிணம் நீலாயதாக்ஷி அம்மன் ஸன்னதியிலும் மற்றும் சிலவிடங்களிலும் பஞ்சமுக கணபதியைக் காணலாம்.

12. **வல்லப கணபதி:** பார்வதி பரமேஶ்வரரது ப்ரார்த்தனைக்கு இணங்கி, புத்ரனாக அவதரித்து மரீசியின் பெண்ணான வல்லபையை மணந்தார்.

இங்ஙனம் விநாயக அவதாரம், லீலை, சத்ரு சிக்ஷணம், பக்த ரக்ஷணம் முதலியன வர்ணிக்கப்படுகின்றன. இவையன்றி **உச்சிஷ்ட கணபதி, ஹேரம்ப கணபதி** முதலிய பற்பல பெயர்களால் அழைக்கப்படுகிறார்.

## விநாயகர் ப்ரும்மசாரியா க்ருஹஸ்தரா ?

சில இடங்களில் இரு மனைவிகளுடனும், சில இடங்களில் ஒரு பத்னியுடனும், இன்னும் சில இடங்களில் ப்ரும்மசாரியாகவும் காணப்படுவதால் ஸந்தேகம் தோன்றக்கூடும். **ஆனந்த புவனம்** என்ற இடத்தில் ஸித்தி, புத்தி என்ற இரு சக்திகளோடுதான் இருக்கிறார். க்ஞானம் என்பது ப்ரும்ம ஸ்வரூபம், அதுவே விநாயகர். புத்தி இச்சா சக்தி. ஸித்தி க்ரியா சக்தியாகும். இச்சா சக்தியும் க்ரியா சக்தியும் கூட இருந்தால்தான் க்ஞானம் ஒரு காரியத்தைச் செய்யமுடியும். ஸ்ருஷ்டி பரிபாலனம் இவ் விரண்டையும் நடத்தும்போது விநாயகர் க்ருஹஸ்தாச்ரமியே. ப்ரபஞ்சம் ஒடுங்கும்போது இச்சை, க்ரியை எனும் ஶக்திகளையும் தனக்குள்ளே லயப்படுத்தி, கேவல க்ஞானமயமாய் நிற்கிறார். இதுவே ப்ரும்மசர்யமாம். அன்றியும், ஒரு இச்சைகொண்டு ஒரு காரியத்தைத் துவக்கிவிட்டால், இச்சையும் கிரியையும் க்ஞானத்திடமே லயமாகி, க்ஞானமே ஏகாக்ரமாக முக்யமாய் நிற்கின்றது. அந்த நிலை ப்ரும்மசர்யமாம். உலகில் சில அஸுரர்கள் அக்ஞானத்தின் உருவாகத் தோன்றி, ஸாதுக்களை ஹிம்ஸிக்கின்றனர். அந்த அக்ஞானத்தை அகற்ற, அதாவது அஸுரனை ஸம்ஹாரம் செய்யும்போது க்ஞானமே முன் நிற்கவேண்டும். பெண் வடிவமான இச்சா கிரியா சக்திகள் கூடயிருந்தால் கருணை அதிகமாகி அஸுர சிக்ஷை நடை பெறாது. அதலால் 12 அவதாரங்களில் சிலவை ப்ரும்மசாரியாகவே இருக்கின்றன. விநாயகர் ப்ரும்மசாரியுமாவர், க்ருஹஸ்தருமாவர். இரண்டும் பூஜிக்கத்தக்கதே.

## மோதகமும் முதல் பூஜையும் ஏன் ?

எப்பொழுதும் மற்ற எல்லா பக்ஷ்யங்களையும் விட இவருக்கு விசேஷமாக மோதகமே செய்யப்படுகிறது. இதற்கு புராணகதை இருவகை ஸமாதானம் கூறுகிறது.

(1) சிவகுமாரர் இருவர் விநாயகனும் ஸுப்ரஹ்மண்யனுமாம். இருவரும் தந்தை தாயிடம் இருக்கும் போது தேவர்கள் அமிருதத்தினுல் பூர்ணமான மோதகம் ஒன்றைக் கொண்டுவந்து சிவனிடம் அளித்தனர். இதை யாருக்கு அளிப்பது என சிவன் சிந்தை கொண்டார். இருவரில் எவர் தன் பாபத்தை நீக்கிக்கொண்டு முதலில் வருகிருரோ அவருக்கே மோதகம், அவருக்கே முதல் பூசை என அமரர் கூறினர். குமரன் மயில் மீதேறி, புண்ய நதிகளில் புனலாடி பாபத்தை அகற்றிவரச் சென்ருர். விநாயகரோ அருகிலுள்ள அன்னையையும் பிதாவையும் வலம் வந்து மோதகத்தைப் பெற்ருர். முதல் பூஜையும் அவருக்கே என்ருர் மாதேவன். அறிவுக் களஞ்சியமான வேதம் விசாலமானது. வேதப் பொருளான குஹன் வேத விதிப்படி பாபந் துலைய தீர்த்த யாத்ரை முதலிய கர்மங்களைச் செய்தார். ப்ரணவ வடிவனுன கணேசனே வேத வேத்யனுன பிதாவை வலம் வந்து குறுக்கு வழியில் சுருக்கமாகப் பாபம் நீங்கும் வழி கண்டார். ப்ரதக்ஷிணம் என்பது உடலால் ப்ரணவம் எழுதுவதாம். அன்றுமுதல் இவருக்கு மோதகமும் முதற் பூஜையும் ஸித்தமானது. த்ரிபுர ஸம்ஹாரத்திற்குக் கிளம்பிய த்ரிபுராரி விநாயகனைப் பூஜிக்காமல் சென்றதால், தேரின் அச்சு அறுந்தது. அந்த இடமே அச்சறுப்பாக்கம் என இன்றும் ப்ரஸித்தமாயிருக்கிறது. அவர் ப்ரணவம். குமரன் வேதார்த்தம். ஓம் என்று கூறியே வேதத்தை ஆரம்பிக்க வேண்டும்.

(2) ஸப்த ரிஷிகள் தேவ பூஜை செய்யும் போது விநாயகர் பால்யப் பருவத்தில் அங்கு சென்ருர். அவர்கள், ப்ரத்யக்ஷ கணேசன் எதிரில் வருவதை விட்டு, ஶோணபத்ரம் என்ற சிலையில் அவரை அர்ச்சித்தனர். அவர் அந்த சிலையைத் துதிக்கையால் எடுத்து விழுங்கி, தானே விநாயகர் என எண்பித்தார். அப்பொழுதும்

அவர்கள் உண்மை அறியாமல் வேறொரு சிலையில் விநாயகரை அர்ச்சித்தனர். அருந்ததி அம்மாள் விநாயக தத்வம் உணர்ந்தவள். உள்ளே ருசியான பூர்ணத்தை வைத்து, மேலே வெளுப்பான மாவினால் அண்டம்போல் செய்து, விநாயகர் தம் வீடு வரும்போது வஸிஷ்டரிடம் அளித்து ப்ரத்யக்ஷமாகப் பூஜை செய்யச் சொன்னாள். அதைக் கண்டு மகிழ்ந்தார் விநாயகர். அண்டத்திற்குள் ரஸமான, தான் பூர்ணமாக இருப்பதை இவள் உணர்ந்தாள், என்று அவர்களுக்கு ஆனந்த வடிவமான ஜீவன் முக்தியை அளித்தார். இங்ஙனம் அர்ச்சிப்பவருக்கு ஆனந்த, மோத, ப்ரமோதம் கிடைக்கும் என எண்பிக்கவே ஸதா மோதகத்தைக் கரத்தில் தாங்கி நிற்கிறார். அதனால் "முதாகராத்த மோதகம் ஸதா விமுக்தி ஸாதகம்" என கணேச பஞ்சரத்னத்தில் ஆதி ஆசார்யர் வர்ணிக்கிறார். காரமான பூர்ணம் நிறைந்த கொழக்கட்டை பூஜார்ஹமல்ல.

## குட்டிக்கொள்ளுதலும் தோபகரணமும்.

இவ்விரண்டும் விநாயகர் ஸன்னதிக்கே தனியாக ஏற்பட்ட சிறப்பான முறை. இதற்கும் புராணம் இரு வகையாகக் கதை கூறுகின்றது.

(1) சிவனிட மிருந்து உயர்ந்த சிவலிங்கத்தைப் பெற்று ராவணன் அதை லங்கையில் ப்ரதிஷ்டை செய்யக் கருதினான். அப்படிச் செய்து முடித்துவிட்டால் அவனை வெல்ல ஒருவராலும் இயலாது. அமரர் அனைவரும் கலந்து யோசித்து, விநாயகரை வேண்டினர். அவர் ப்ரும்மசாரி வடிவந் தாங்கி ராவணனருகே சென்றார். இவரது செயலால் அவனுக்கு மூத்ர விஸர்ஜனம் செய்ய அவசரம் நேர்ந்தது. சிவலிங்கம் முதலிய சிறந்த வஸ்துக்களைப் பூமியில் வைக்கலாகாது. கையில் வைத்துக் கொண்டும் ஜலமலம் கழிக்கக்கூடாது. அன்றியும் இதைக் கீழே வைத்தால் மறுபடி எடுக்க முடியாது என சிவன் எச்சரிக்கை செய்திருந்தார். ஆதலின் அவன் யத்ருச்சையாய் வந்த ப்ரும்மசாரியிடம் அதை யளித்து, தான் சுத்தி செய்துகொண்டு வருமளவும் கையில் வைத்திருக்கும்படி கூறினான். அவரும் அதற்கு இசைந்து, "மும்முறை கூப்பிடுவேன், அதற்குள் நீ வராவிடில் பூமியில் வைத்து

விடுவேன்'' என்ருர். ராவணன் ஜலவிஸர்ஜனம் செய்யும்போது விநாயகரது மாயையால் மேன்மேலும் மூத்ரம் வந்தவண்ணமே இருந்தது. விநாயகரும் தான் சொன்னபடி மும்முறை அழைத்தும் அவன் வராததால் லிங்கத்தை பூமிமீது வைத்துச் சென்ருர். வெகு ச்ரமத்துடன் அவன் அதை முடித்துக்கொண்டு வந்து சிவ லிங்கத்தைத் தூக்கினன். அது வராமல், பூமியில் ஊன்றிவிட்டது. தசமுகன் சினங்கொண்டு, ஓடிப்பிடித்து ப்ரும்மசாரி தலையில் குட்டினன். அவர் தனது நிஜ ரூபத்தை எடுத்தார். பயந்து அரக்கன், "ஸ்வாமீ, யான் செய்த தவறை மன்னிக்கவும். அதற்காக எனது இரு கரங்களால் என்னையே குட்டிக்கொள்கிறேன்'' என்ருன்.

(2) கஜமுகாஸுரனை விநாயகர் அடித்துக் கீழே தள்ளியபின் அவன் பெருச்சாளி உருவெடுத்துப் போர் புரிந்தான். அதனிலும் தோல்வியுற்று அவருக்கு வாஹனமாகி, அவரைப் போற்றிப் புகழ்தான். "யாது வரம் வேண்டும்?'' என விநாயகர் கேட்க, தான் அரசனுக இருந்தபோது தேவர்களுக்குத்தந்த சிக்ஷையான, தலையில் குட்டிக்கொள்ளுதல், இரு காதுகளையும் பிடித்துக் கொண்டு தோபகர்ணம் (த்வாப்யாம் கர்ண) என்பவைகளை நம் ஸன்னதியில் உமது பக்தர்கள் செய்ய வேண்டும்'' எனக் கேட்டான். அன்று முதல் இந்த வழக்கம் ஏற்பட்டது என ஒரு புராணம் கூறுகிறது,

இவைகளை உற்று நோக்குபவருக்கு உயரிய தத்துவம் ஒன்று தோன்றும். அஃது யாது? உள்ளங்காலிலிருந்து உச்சம் தலைவரை நமது நரம்புகள் கத்தரிக்கோல் போல் செல்கின்றன. அடிக்கடி உட்கார்ந்து எழுந்திருப்பதால் (தோபகர்ணத்தால்) அந்த நாடிகள் சுறுங்கி நிற்காமல் நீண்டு உள்ளே ரத்தம் ஓட நன்கு வழி கொடுக்கும். சுத்த ரத்தம் மூளைக்குச் செல்வதால் சாந்தமான நினைவுகள் தோன்றும். இரு கரங்களாலும் இரு புறமும் குட்டிக் கொள்வதால் ஸஹஸ்ராரம் என்ற விடத்திலிருந்து (உண்மை உணர்ந்து உபாஸிக்கும்) யோகிகளுக்கு அமிருதம் சிந்தும். அதன் மூலமாக ஆனந்தமுண்டாகும். இவ் வனுபவம் யோகிகளுக்கு ப்ரத்யக்ஷம். மற்றவர்

விஷயம் உணராமலே இதை அனுஷ்டித்து வந்தால், விஷயம் அறிந்தபின் அனுபவிக்கலாம் என்ற உயர் கொள்கையால் எல்லோரும் இதைக் கைக்கொள்ளும்படி பெரியோர் ஏற்படுத்தினர் போலும்.

## பிள்ளையார் சுழி ஏன் போடுகிறோம் ?

"ஏக தந்தர்" என விநாயருக்கு ஒரு பெயருண்டு. ஒரு கொம்பு உள்ளவர் என்பது அதன் பொருள். ஏன் ஏக தந்தனுக ஆனுர்? என்பதற்கும் இரு கதைகள் உள. (1) எந்த ஆயுதத்திஞலும் தனக்கு மரணம் வரக்கூடாது என வரம் பெற்ற அஸுரனைக் கொல்ல தனது தந்தத்தில் ஒன்றை முறித்துக் கொன்ருர். (2) வேதவ்யாஸர் தான் இயற்றிய மஹா பாரதத்தை எழுத விநாயகரையே வேண்டினுர். அவர் தனது தந்தத்தில் ஒன்றை முறித்து, கூறிய எழுத்தாணியாகக் கொண்டு எழுதினுர். அதனுல் அவர் ஏக தந்தர் என பாரதம் கூறுகிறது. உலகில் முதலில் எழுத்தைத் கண்டு எழுத ஆரம்பித்தவர் விநாயகரே. அதுவரை ஒருவர் சொல்வதை ஒருவர் கேட்டு ஒலி வடிவமாகவே இருந்தன வேதம், புராணம் முதலியவை. கலியில் அத்தகைய அறிவின் முதிர்ச்சியிராது எனக் கண்ட வ்யாஸர் வேண்டியபடி ஒலிக்கு உருவம் அளித்து எழுத்தாக்கினுர் விநாயகர். அந்த ஞாபகத்திற்காக, வளைந்த துதிக்கைபோல் பிள்ளையார் சுழி என முதலில் அடையாளமிட்டுப் பின்னர் எழுத ஆரம்பிப்பது சான்றோர் வழக்கம்.

## தூர்வையின் பெருமையும் துளஸி வேண்டாமையும்.

விநாயக பூஜைக்கு தூர்வை எனும் அருகம்புல் மிக உயர்ந்தது. விநாயகர் ஜோதி, சுடர், ஞானத்தீ அல்லவா? எவருக்கும் தன் இனத்தைச் சார்ந்ததில் ப்ரியமுண்டு. தூர்வையோ உஷ்ண வீர்யமுள்ளது. அதன் சூடு அளவு கடந்தது. நடராஜமூர்த்தி தீயை ஏற்றதுபோல் தூர்வையை இவர் விருப்புடன் ஏற்கிருர். அநலன் என்ற அரக்கனை விழுங்கியபோது அவன் அவர் உள்ளேசென்று ஆங்குள்ள பதினுன்கு உலகையும் தஹித்தான். அது சமனமாகத் தூர்வையைத் தரித்தார் என்பது புராணக்

கூற்று. உஷ்ணம் உஷ்ணத்தால் அகலும். அமிருதக் கடலிலிருந்து உண்டானது தூர்வை. அது துஸ்வப்ப னத்தைப் போக்கவல்லது என வேதம் கூறுகிறது. சாந்தி கரமான சில கர்மாவில் தூர்வா ஹோமம் செய்கிறோம்.

துளஸீ தேவி பல்லாண்டு தவம்புரிந்து விநாயகரை மணக்க விரும்பினாள். அவர் "நீ விஷ்ணுவுக்குப் பத்தினி யாக இரு" என்று பலமுறை கூறியும் அவள் நிர்ப்பந்தம் செய்தாள். அதைக்கண்டு கோபங்கொண்டார் விநாயகர். "செடி வடிவமாக ஆவாய் நீ, எனது (நித்ய) பூஜைக்கு நீ ஏற்றவளல்ல" என சபித்தார். ஆதலால் விநாயக சதுர்த்தி தவிர மற்ற நாட்களில் துளஸியால் விநாயகரை பூஜிக்கக் கூடாது.

ஒவ்வொரு சுக்ல பக்ஷ சதுர்த்தியிலும், விசேஷமாக விநாயக சதுர்த்தி அன்றும் சந்த்ரனைப் பார்க்கலாகாது. பார்ப்பவர் படாப்பழிக்கு ஆளாவர். பக்தரது விக்நத்தை அகற்றுவதாலும், துஷ்டருக்கு விக்னத்தை அளிப்ப தாலும் "விக்நேசர்."



# ஸ்ரீ விநாயக பூஜா கல்பம்.



சுக்லாம் பரதரம் விஷ்ணும் சசிவர்ணம் சதுர்புஜம்
ப்ரஸன்ன வதனம் த்யாயேத் ஸர்வ விக்னோப சாந்தயே.

ஓம்பூ: ஓம்புவ: ஓகும்ஸுவ: ஓம்மஹ: ஓம்ஜந: ஓம்தப: ஓகும்ஸத்யம் ஓம் தத்ஸவிதுர்வரேண்யம்— பர்கோ தேவஸ்ய திமஹி தியோயோந: ப்ரசோதயாத். ஓமாபோ ஜோதீரஸோம்ருதம் ப்ரும்ம பூர்புவஸ்ஸுவரோம்.

ஸங்கல்பம்: மமோபாத்த ஸமஸ்த துரிதக்ஷயத்வாரா ஸ்ரீ பரமேச்வர ப்ரீத்யர்த்தம் சுபேசோபனே முகூர்த்தே ஆத்ய ப்ரும்மண: த்விதீயே பரார்த்தே ச்வேத வராஹகல்பே வைவஸ்வத மன்வந்தரே அஷ்டாவிம் சதிதமே கலியுகே ப்ரதமே பாதே ஜம்பூத்வீபே பாரத வர்ஷே பரதகண்டே மேரோ: தக்ஷிணே பார்ச்வே சகாப்தே அஸ்மின் வர்த்தமானே வ்யாவஹாரிகே ப்ரப வாதி ஷஷ்டி ஸம்வத்ஸராணும் மத்யே — நாம ஸம்வத் ஸரே தக்ஷிணுயனே வர்ஷரிதௌ ச்ராவணமாஸே சுக்ல பக்ஷே சதுர்த்யாம் சுபதிதௌ ஸௌம்யவாஸர யுக்தா யாம் — நக்ஷத்ர யுக்தாயாம் சுபயோக சுபகரண ஏவங்குண விசேஷண விசிஷ்டாயாம் அஸ்யாம் சதுர்த் யாம் தர்ம அர்த்த காமமோக்ஷ சதுர்வித பலபுருஷார்த்த ஸித்யர்த்தம் விநாயக ப்ரஸாதேன ஸர்வ அபீஷ்ட ஸித்யர்த்தம் ஸ்ரீ மஹா கணபதி பூஜாங்கரிஷ்யே—என்று கூறி கை யலம்பி தீர்த்த பாத்ரத்திற்கு நாற்புறமும் சந்தனம் இட்டு உள்ளே ஒரு புஷ்பம்போட்டு,

கங்கேச யமுனேசைவ கோதாவரி ஸரஸ்வதி
நர்மதே ஸிந்து காவேரி ஜலேஸ்மின் ஸன்னதிம் குரு.

என்று கூறி புஷ்ப ஜலத்தால் தன்னையும் பூஜாத்ரவ்யங் களையும் ப்ரோக்ஷித்து விநாயக பூஜை ஆரம்பிக்க வேண் டும். வேதமறிந்தவர் வேதமந்த்ரம் கூறி ப்ராண ப்ர திஷ்டை செய்து வேத மந்த்ரத்தால் ஆவாஹனம் செய்யலாம்.

## த்யானம்.

ஏகதந்தம் சூர்ப கர்ணம் கஜவக்த்ரம் சதுர்புஜம்.
பாசாங்குசதரம் தேவம் த்யாயேத் ஸித்திவிநாயகம்.
உத்தமம் கண நாதஸ்ய வ்ரதம் ஸம்பத்கரம் சுபம்.
பக்தானும் இஷ்ட தாதாரம் ஸர்வமங்கள காரகம்.
த்யாயேத் கஜாநனம் தேவம் தப்த காஞ்சன ஸன்னிபம்.
சதுர்புஜம் மஹாகாயம் ஸர்வாபரண பூஷிதம்.
(அஸ்மின் பிம்பே ஸுமுகம் மஹாகணபதிம் த்யாயாமி)

அத்ராகச்ச ஜகத்வந்த்ய ஸுரராஜார்சிதேச்வர
அநாத நாத ஸர்வக்ஞ கீர்வாணஸுர பூஜித.
(ஆவாஹயாமி) பிம்பத்தின்மீது புஷ்பம் போடுக.

அநேக ரத்ந கசிதம் முக்தாமணி விபூஷிதம்
ரத்ந ஸிம்மாஸனம் சாருப்ரீத்யர்த்தம் ப்ரதி க்ருஹ்யதாம்
(ஆஸனம் ஸமர்ப்பயாமி)

கௌரீ புத்ர நமஸ்தேஸ்து சங்கர ப்ரிய நந்தன
பக்த்யா பாத்யம் மயா தத்தம் க்ருஹாண த்விரதானன.
(பாத்யம் ஸமர்ப்பயாமி)
ஒரு பாத்ரத்தில் சிறிது ஜலம் விடுக

வ்ரதமுத்திச்ய விக்நேச கந்த புஷ்பாக்ஷதைர் யுதம்
க்ருஹாணார்க்யம் மயாதத்தம் கஜாநன நமோஸ்து தே.
(அர்க்யம் ஸமர்ப்பயாமி)

அநாத நாத ஸர்வக்ஞ தேவராஜ ஸுபூஜித
க்ருஹாண ஆசமனம் தேவ பக்த்யா தத்தம் மயா ப்ரபோ
(ஆசமனீயம் ஸமர்ப்பயாமி)

ததிக்ஷீர ஸமாயுக்தம் மத்வாஜ்யேன ஸமன்விதம்
மது பர்க்கம் க்ருஹாணேதம் கஜவக்த்ர நமோஸ்து தே.
(மதுபர்க்கம் ஸமர்ப்பயாமி) புஷ்பம்போடுக.

மத்வாஜ்ய சர்கராயுக்தம் பல க்ஷீர ஸமன்விதம்
க்ருஹாண ஸர்வ வ்ரத பக்தானும் இஷ்டதாயக.
(பஞ்சாமிருத ஸ்னனம் ஸமர்ப்பயாமி)

கங்காதி ஸர்வ திர்த்தேப்ய: ஆஹ்ருதை: விமலைர்ஜலை:
ஸ்நானம் குருஷ்வ பகவன் உமா புத்ர நமோஸ்து தே.
(சுத்தோதக ஸ்நானம் ஸமர்ப்பயாமி)
(ஸ்னனந்தரம் ஆசமநீயம் ஸமர்ப்பயாமி) ஜலம்விடுக.

ரக்த வஸ்த்ர த்வயம் தேவ தேவராஜ ஸுபூஜித
பக்த்யா தத்தம் க்ருஹாணேதம் லம்போதர ஹராத்மஜ.
(வஸ்த்ரயுக்மம் ஸமர்ப்பயாமி)
பஞ்சால் செய்த வஸ்த்ரமளிக்கவும்.

ராஜதம் ப்ரஹ்ம ஸூத்ரஞ்ச காஞ்சனஞ்ச உத்தரீயகம்
க்ருஹாண ஸர்வ தர்மக்ஞ பக்தானும் இஷ்டதாயக.
(உபவீதம் ஸமர்ப்பயாமி) பூநூல் அளிக்கவும்.

சந்தன கரு கர்பூர கஸ்தூரி குங்குமான்விதம்
விலேபனம்ஸுரச்ரேஷ்ட ப்ரீத்யர்த்தம் ப்ரதிக்ருஹ்யதாம்
(கந்தான் தாரயாமி) சந்தனம் இடுக.

அக்ஷதான் தவளான் திவ்யான் சாலீயான் தண்டுலான் சுபான்
ஹரித்ரா சூர்ண ஸம்யுக்தான் ஸம்க்ருஹாண கணுதிப.
(அக்ஷதான் ஸமர்ப்பயாமி) அக்ஷதை போடவும்.

ஸுகந்தினி ஸுபுஷ்பாணி ஜாஜீ குந்த முகானி ச
ஏகவிம்சதி புஷ்பாணி க்ருஹாண கண நாயக.
(புஷ்பாணி ஸமர்ப்பயாமி) புஷ்பம் போடுக.

## அங்க பூஜை.

| | | | |
|---|---|---|---|
| கணேசாய | நம: | பாதௌ | பூஜயாமி |
| ஏகதந்தாய | ,, | குல்பௌ | ,, |
| கௌரீபுத்ராய | ,, | ஜங்கே | ,, |
| விக்நராஜாய | ,, | ஜானுனீ | ,, |

| | | | |
|---|---|---|---|
| ப்ரஹ்மசாரிணே | நம: | ஊரூ | பூஜயாமி |
| ஹேரம்பாய | ,, | கடிம் | ,, |
| பார்வதீ நந்தனுய | ,, | குஹ்யம் | ,, |
| ஈசபுத்ராய | ,, | மேட்ரம் | ,, |
| கண நாதாய | ,, | நாபிம் | ,, |
| லம்போதராய | ,, | உதரம் | ,, |
| விநாயகாய | ,, | வக்ஷஸ்தலம் | ,, |
| விக்னபர்வத தம்போளயே | ,, | பார்ச்வௌ | ,, |
| விகடாய | ,, | ஹ்ருதயம் | ,, |
| ஸ்தூலகண்டாய | ,, | கண்டம் | ,, |
| ஸ்கந்தாக்ரஜாய | ,, | ஸ்கந்தௌ | ,, |
| பாசஹஸ்தாய | ,, | ஹஸ்தான் | ,, |
| சதுர்புஜாய | ,, | பாஹூன் | ,, |
| கஜமுகாய | ,, | முகம் | ,, |
| ஏகதந்தாய | ,, | தந்தௌ | ,, |
| விக்ந நேத்ரே | ,, | நேத்ரே | ,, |
| சூர்பகர்ணுய | ,, | கர்ணௌ | ,, |
| பாலசந்த்ராய | ,, | லலாடம் | ,, |
| உமாபுத்ராய | ,, | நாஸிகாம் | ,, |
| விக்னஹந்த்ரே | ,, | சுபுகம் | ,, |
| சுண்டாதண்டாய | ,, | ஓஷ்டௌ | ,, |
| ஹரஸூநவே | ,, | கண்டஸ்தலம் | ,, |
| குஹாக்ரஜாய | ,, | கசான் | ,, |
| ஸர்வேச்வராய | ,, | சிர: | ,, |
| விக்நராஜாய | ,, | ஸர்வாண்யங்காணி | ,, |

## ஏகவிம்சதி பத்ர பூஜா.

| | | | |
|---|---|---|---|
| ஸுமுகாய | நம: | மாசீபத்ரம் | ஸமர்ப்பயாமி |
| கணுதிபாய | ,, | ப்ருஹதீ பத்ரம் | ,, |
| உமாஸுதாய | ,, | பில்வ பத்ரம் | ,, |

| | | |
|---|---|---|
| கஜானனய | நம: | தூர்வாயுக்மம் ஸமர்ப்பயாமி |
| ஹரஸூனவே | ,, | துர்தூர பத்ரம் ,, |
| லம்போதராய | ,, | பதரீ பத்ரம் ,, |
| குஹாக்ரஜாய | ,, | அபாமார்க்க பத்ரம் ,, |
| கஜகர்ணகாய | ,, | துளஸீ பத்ரம் ,, |
| ஏகதந்தாய | ,, | சூத பத்ரம் ,, |
| விகடாய | ,, | கரவீர பத்ரம் ,, |
| பின்ன தந்தாய | ,, | விஷ்ணுக்ராந்தபத்ரம் ,, |
| வடவே | ,, | தாடிமீ பத்ரம் ,, |
| த்விரதானனய | ,, | ஆமலக பத்ரம் ,, |
| பால சந்த்ராய | ,, | மருவக பத்ரம் ,, |
| ஹேரம்பாய | ,, | ஸிந்தூர பத்ரம் ,, |
| சூர்பகர்ணய | ,, | ஜாஜீ பத்ரம் ,, |
| ஸுராக்ரஜாய | ,, | கந்தலீ பத்ரம் ,, |
| இபவக்த்ராய | ,, | சமீ பத்ரம் ,, |
| விநாயகாய | ,, | ப்ருங்கராஜ பத்ரம் ,, |
| ஸுரபூஜிதாய | ,, | அர்ஜுந பத்ரம் ,, |
| அகிலாய | ,, | அர்க்க பத்ரம் ,, |
| ஸ்ரீ கணேச்வராய | ,, | ஏகவிம்சதி பத்ரம் ,, |

## ஏகவிம்சதி புஷ்ப பூஜா.

| | | | | |
|---|---|---|---|---|
| பஞ்ஜாஸ்ய கணபதயே | நம: | ஜாஜீ | புஷ்பம் | ஸமர்ப்பயாமி |
| கணும் கணபதயே | ,, | ஸாவந்திக | ,, | |
| தீர கணபதயே | ,, | சம்பக | ,, | ,, |
| விஷ்வக்ஸேனகணபதயே | ,, | வகுள | ,, | ,, |
| ஆமோத கணபதயே | ,, | பாடலீ | ,, | ,, |
| ப்ரமத கணபதயே | ,, | புன்னக | ,, | ,, |
| ருத்ர கணபதயே | ,, | த்ரோண | ,, | ,, |
| வித்யா கணபதயே | ,, | ரஸால | ,, | ,, |
| விக்ன கணபதயே | ,, | அம்ருணள | ,, | ,, |
| துரித கணபதயே | ,, | கல்கார | ,, | ,, |

| | | | |
|---|---|---|---|
| பக்தவத்ஸல கணபதயே நம: | | கமல புஷ்பம் | ஸமர்ப்ப |
| காமிதார்த்த ப்ரத ,, | ,, | மல்லிகா ,, | யாமி |
| ஸம்மோஹ கணபதயே | ,, | துர்தூர ,, | ,, |
| விஷ்ணு கணபதயே | ,, | சம்யாக ,, | ,, |
| ஈசாஸ்ய கணபதயே | ,, | அர்க ,, | ,, |
| கஜாஸ்ய கணபதயே | ,, | கரவீர ,, | ,, |
| ஸர்வஸித்தி கணபதயே | ,, | பில்வ ,, | ,, |
| வீர கணபதயே | ,, | மந்தார ,, | ,, |
| கந்தர்ப கணபதயே | ,, | கேதகீ ,, | ,, |
| உச்சிஷ்ட கணபதயே | ,, | பாரீஜாத ,, | ,, |
| ப்ரஹ்ம கணபதயே | ,, | தாடிமீ ,, | ,, |

## ஏகவிம்சதி தூர்வாயுக்ம பூஜா.

(தூர்வாயுக்மம் பூஜயாமி என்று ஒவ்வொன்றிற்கும் சேர்த்துக்கொள்ளவும்.)

| | | | |
|---|---|---|---|
| கணாதிபாய | நம: | ப்ரஹ்மசாரிணே | நம: |
| பாசாங்குசதராய | ,, | மோதகஹஸ்தாய | ,, |
| ஆகு வாஹனாய | ,, | ஸுரச்ரேஷ்டாய | ,, |
| விநாயகாய | ,, | கஜநாஸிகாய | ,, |
| ஈச புத்ராய | ,, | கபித்தபலப்ரியாய | ,, |
| ஸர்வஸித்திப்ரதாய | ,, | கஜமுகாய | ,, |
| ஏகதந்தாய | ,, | ஸுப்ரஸன்னாய | ,, |
| இபவக்த்ராய | ,, | ஸுராக்ரஜாய | ,, |
| மூஷிகவாஹநாய | ,, | உமாபுத்ராய | ,, |
| குமாரகுரவே | ,, | ஸ்கந்த ப்ரியாய | , |
| கபிலவர்ணாய | ,, | | |

தூர்வாயுக்மம் பூஜயாமி.



# அஷ்டோத்தர சதநாமார்ச்சனே.

1 ஓம் கஜானநாய நம:
2 ,, கணத்யக்ஷாய ,,
3 ,, விக்னராஜாய ,,
4 ,, விநயகாய ,,
5 ,, த்வைமாதுராய ,,
6 ,, த்விமுகாய ,,
7 ,, ப்ரமுகாய ,,
8 ,, ஸுமுகாய ,,
9 ,, க்ருதினே ,,
10 ,, ஸுப்ரதீபாய ,,
11 ,, ஸுகநிதயே ,,
12 ,, ஸுராத்யக்ஷாய ,,
13 ,, ஸுராரிக்னே ,,
14 ,, மஹாகணபதயே
15 ,, மான்யாய ,,
16 ,, மஹாகாலாய ,,
17 ,, மஹாபலாய ,,
18 ,, ஹேரம்பாய ,,
19 ,, லம்பஜடராய ,,
20 ,, ஹ்ரஸ்வக்ரீவாய ,,
21 ,, மஹோதராய ,,
22 ,, மதோத்கடாய ,,
23 ,, மஹாவீராய ,,
24 ,, மந்த்ரிணே ,,
25 ,, மங்களாய ,,
26 ,, ஸுஸ்வராய ,,
27 ,, ப்ரமதாய ,,
28 ,, ப்ரதமாய ,,
29 ,, ப்ராக்ஞாய ,,
30 ,, விக்நகர்த்ரே ,,

31 ஓம் விச்வநேத்ரே நம:
32 ,, விராட்பதயே ,,
33 ,, ஸ்ரீபதயே ,,
34 ,, வாக்பதயே ,,
35 ,, ஶ்ருங்காரிணே ,,
36 ,, ஆச்ரிதவத்ஸலாய
37 ,, சிவப்ரியாய ,,
38 ,, சீக்ரகாரிணே ,,
39 ,, சாஶ்வதாய ,,
40 ,, பலாய ,,
41 ,, பலோத்ததாய ,,
42 ,, பவாத்மஜாய ,,
43 ,, புராணபுருஷாய ,,
44 ,, பூஷ்ணே ,,
45 ,, புஷ்கரோக்ஷிப்த வாரிணே ,,
46 ,, அக்ரகண்யாய ,,
47 ,, அக்ரபூஜ்யாய ,,
48 ,, அக்ரகாமினே ,,
49 ,, மந்த்ரக்ருதே ,,
50 ,, சாமீகரப்ரபாய ,,
51 ,, ஸர்வஸ்மை ,,
52 ,, ஸர்வோபாஸ்யாய
53 ,, ஸர்வகர்த்ரே ,,
54 ,, ஸர்வநேத்ரே ,,
55 ,, ஸர்வஸித்திப்ரதாய
56 ,, ஸர்வஸித்தயே ,,
57 ,, பஞ்சஹஸ்தாய ,,
58 ,, பார்வதீநந்தனய ,,
59 ,, ப்ரபவே ,,

60 ஓம் குமாரகுரவே நம:
61 ,, அக்ஷோப்யாய ,,
62 ,, குஞ்ஜராஸுர பஞ்ஜனாய ,,
63 ,, ப்ரமோதாய ,,
64 ,, மோதகப்ரியாய ,,
65 ,, காந்திமதே ,,
66 ,, த்ருதிமதே ,,
67 ,, காயினே ,,
68 ,, கபித்த பனஸ ப்ரியாய ,,
69 ,, ப்ரஹ்மசாரிணே ,,
70 ,, ப்ரஹ்மரூபிணே ,,
71 ,, ப்ரும்மவித்யா நிதானபுவே ,,
72 ,, ஸரஸாம்பு நிதயே
73 ,, மஹேசாய ,,
74 ,, விசதாங்காய ,,
75 ,, மணி கிங்கிணி மேகலாய ,,
76 ,, ஸமஸ்த தேவதா மூர்த்தயே ,,
77 ,, ஸஹிஷ்ணவே ,,
78 ,, ஸததோத்திதாய ,
79 ,, விகாதகாரிணே ,,
80 ,, விஷ்வக்த்ருசே ,,
81 ,, விச்வரக்ஷாக்ருதே.
82 ,, கல்யாணகுரவே ,,
83 ,, ஜிஷ்ணவே ,,
84 ,, விஷ்ணுப்ரியாய ,,
85 ஓம் பக்தஜீவிதாய நம:
86 ,, ஜிதமன்மதாய ,,
87 ,, ஐச்வர்ய காரணாய ,,
88 ,, ஜ்யாயஸே ,,
89 ,, யக்ஷ கின்னர ஸேவிதாய ,,
90 ,, கங்கா ஸுதாய ,,
91 ,, கணாதீசாய ,,
92 ,, கம்பீர நினதாய ,,
93 ,, வடவே ,,
94 ,, அபீஷ்டவரதாய ,,
95 ,, ஜ்யோதிஷே ,,
96 ,, பக்தநிதயே ,,
97 ,, பாவகம்யாய ,,
98 ,, மங்களப்ரதாய ,,
99 ,, அவ்யக்தாய ,,
100 ,, அபாக்ருத பராக்ரமாய ,,
101 ,, ஸத்யதர்மிணே ,,
102 ,, ஸக்யை ,,
103 ,, உன்மத்த வேஷாய ,,
104 ,, வரஜிதே ,,
105 ,, ஸமஸ்தஜகதாதாராய ,,
106 ,, ஸர்வைச்வர்ய ப்ரதாய ,,
107 ,, ஆக்ராந்த ஸத ஸத் ப்ரபவே ,,
108 ,, விக்னேச்வராய ,,

ஶதநாமார்ச்சனாம் ஸமர்ப்பயாமி.

தசாங்கம் குக்குலூபேதம் ஸுகந்தம் ச மனோஹரம்
தூபம் தாஸ்யாமி தேவேஶ க்ருஹாண த்வம் கஜானன.
(தூபமாக்ராபயாமி)

ஸாஜ்யம் த்ரிவர்தி ஸம்யுக்தம் வஹ்னினா யோஜிதம் மயா
க்ருஹாண மங்களம் தீபம் ஈசபுத்ர நமோஸ்து தே
(தீபம் ஸமர்ப்பயாமி)

நைவேத்யம் ஷட்ரஸோ பேதம் பல லட்டுக மோதகான்
பக்ஷ்யம் போஜ்யம்ச லேஹ்யம்ச த்வம் க்ருஹாண
கணாதிப.

(ஒவ்வொன்றிலும் 21 எடுத்துவைத்து நிவேதனம் செய்யவும்.)

(ஆசமனீயம் ஸமர்ப்பயாமி)

பானீயம் பாவநம் ச்ரேஷ்டம் கங்காதி ஸரிதாஹ்ருதம்
ஹஸ்தப்ரக்ஷாளனார்த்தம் த்வம் ஸங்க்ருஹாண கணாதிப.
(ஹஸ்த ப்ரக்ஷாளனம் ஸமர்ப்பயாமி)

பூகிபல ஸமாயுக்தம் நாகவல்லீ தளைர்யுதம்
கர்பூர்சூர்ண ஸம்யுக்தம் தாம்பூலம் ப்ரதிக்ருஹ்யதாம்.
(தாம்பூலம் ஸமர்ப்பயாமி)

நீராஜனம் ஸுமாங்கள்யம் ஸர்வமங்கள காரணம்
க்ருஹாண பரயாபக்த்யா அர்பிதம்தே விநாயக.
(நீராஜனம் ஸமர்ப்பயாமி) (ஆசமனீயம்)

ஜாஜீ சம்பக புன்னாக மல்லிகா வகுளாதிபி:
புஷ்பாஞ்ஜலிம் ப்ரதாஸ்யாமி க்ருஹாண த்விரதானன.
(புஷ்பாஞ்ஜலிம் ஸமர்ப்பயாமி)
(வேத மந்த்ரம்-யோபாம் புஷ்பம் வேத)

யானி கானிச பாபானி ஜன் மாந்தர க்ருதானிச
தானிதானி விநச்யந்தி ப்ரதக்ஷிண பதே பதே.
ப்ரதக்ஷிணம் கரிஷ்யாமி ஸததம் மோதக ப்ரிய
மத்விக்னம் ஹரமே சீக்ரம் பக்தானும் இஷ்டதாயக.
ஆகுவாஹன தேவேச விச்வ வ்யாபின் கஜானன
ப்ரதக்ஷிணம் கரோமித்வாம் ஸர்வைச்வர்ய ப்ரதோபவ.

(ப்ரதக்ஷிண நமஸ்காரம்)

நமோநமோ கணேசாய நமஸ்தே விச்வரூபிணே
நிர்விக்னம் குரு மே தேவ நமாமி த்வாம் கஜானன.
அகஜானன பத்மார்க்கம் கஜானனம் அஹர்நிசம்
அநேகதம் தம்பக்தானும் ஏகதந்தம் உபாஸ்மஹே.
நமஸ்தே பின்ன தந்தாய நமஸ்தே ஹரஸூனவே
மமாபீஷ்ட ப்ரதோதேவ விநாயக நமோஸ்து தே.

(நமஸ்காரம் செய்யவும்)

ப்ரஸீத தேவ தேவேஶ ப்ரஸீத கணநாயக
ஈப்ஸிதம் மே வரம் தேஹி பரத்ரச பராங்கதிம்
விநாயக வரம் தேஹி ஸததம் மோதக ப்ரிய
நிர்விக்னம் குருமே தேவ ஸர்வகார்யேஷு ஸர்வதா.

(ப்ரார்த்தனே)

ஸ்வர்ணபுங்க ஸமாயுக்தம் முக்தாஜால ஸமன்விதம்
ச்வேத பட்டாத பத்ரம் வ: ப்ரததாமி கணாதிப.

(குடை) (ஆதபத்ரம் ஸமர்ப்பயாமி)

வஜ்ரவைடூர்ய கசிதம் சரச்சந்த்ர ஸமப்ரபம்
சமரீ ம்ருக வாலவ்யம் சாமரம் த்வம் க்ருஹாணபோ.

(சாமரம் ஸமர்ப்பயாமி)

உசிர நிர்மிதம் தேவ வ்யஜனம் ஸ்வேத சாந்தயே
ப்ரததாமி கணுத்யக்ஷ ஸந்துஷ்டோ பவ ஸர்வதா
(வ்யஜனம்-விசிரி-ஸமர்ப்பயாமி)

ஆந்தோளிகாம் ஸமர்ப்பயாமி
ஸமஸ்த ராஜோபசாரன் ஸமர்ப்பயாமி.
(கையில் அக்ஷதை பால் இவைகளுடன் மும்மூன்றுமுறை
(அர்க்யம் கொடுக்கவும்.)

அர்க்யம் க்ருஹாண ஹேரம்ப ஸர்வப்ரத விநாயக
கந்தபுஷ்பாக்ஷதைர் யுக்தம் பக்த்யா தத்தம் மயாப்ரபோ
(விக்நேச்வராய நம: இதமர்க்யம் — 3 முறை)

நமஸ்துப்யம் கணேசாய நமஸ்தே விக்னநாயக
புனரர்க்யம் ப்ரதாஸ்யாமி க்ருஹாண கணநாயக.
(விக்னேச்வராய நம: இதமர்க்யம்– 3 முறை)

நமஸ்தே பின்னதந்தாய நமஸ்தே ஹரஸூனவே
இதமர்க்யம் ப்ரதாஸ்யாமி ஸங்க்ருஹாண கணுதிப.
(விக்னேச்வராய நம: இதமர்க்யம் – 3 முறை)

கௌர்யம் விமலஸம்பூத ஜ்யேஷ்ட ஸ்வாமின் விநுயக
கணேச்வர க்ருஹாணுர்க்யம் கஜானன நமோஸ்துதே.
(விக்னேச்வராய நம: இதமர்க்யம் – 3 முறை)

அநேன அர்க்ய ப்ரதானேன பகவான் ஸர்வாத்மக:
ஸர்வம் ஸ்ரீ மஹாகணபதி: ப்ரீயதாம்.

**உபாயனம்:** அத்ய பூர்வோக்த ஏவங்குண விசேஷண விசிஷ்டாயாம் அஸ்யாம் சதுர்த்யாம் சுபதிதௌ மஹா கணபதி ப்ரீத்யர்த்தம் மஹாகணபதி பூஜா ஸாங்கபல

ஸித்யர்த்தம் உபாயன தானம் ப்ராஹ்மண பூஜாம் ச கரிஷ்யே —(என்று ஸங்கல்பம் செய்துகொண்டு) மஹா கணபதி ஸ்வரூபஸ்ய ப்ராஹ்மணஸ்ய இதமாஸனம்.

கணேச: ப்ரதிக்ருஹ்ணது கணேசோ வை ததாதிச
கணேசஸ் தாரகோத்வாப்யாம் கணேசாய நமோ நம: ||

என்று சொல்லி ப்ராம்மணருக்கு உபாயன தானம் செய்யவும்.

| | |
|---|---|
| யஸ்யஸ்ம்ருத்யா ச நாமோக்த்யா தப: பூஜா க்ரியாதிஷு<br>ந்யூநம் ஸம்பூர்ணதாம் யாதி ஸத்யோ வந்தே கஜானனம். | அந்தந்த பூஜைக்கும் இந்த சுலோகம் சொல்லவும். |

(ஓம் தத் ஸத் ப்ரும்மார்ப்பண மஸ்து)

**ஸ்ரீ விநாயக பூஜை முற்றிற்று.**



## கைவசமுள்ள விருத புத்தகங்கள்.

| | | விலை. | | த. சார்ஜ் | |
|---|---|---|---|---|---|
| | | ரு. | ந.பை. | ரு. | ந.பை. |
| 1 | ஸ்ரீ விநாயக ஸஹஸ்ரநாமம் | 1 | 00 | 0 | 11 |
| 2 | ஸ்ரீ விநாயக புராணம் ... | 2 | 50 | 0 | 20 |
| 3 | யஜுர்வேத ஆவணி அவிட்டம் | 0 | 50 | 0 | 10 |
| 4 | ஸ்ரீ வரலக்ஷ்மீ பூஜை (3ம் பதிப்பு) | 0 | 31 | 0 | 8 |
| 5 | சித்ரகுப்த காமாக்ஷி க்ரடைநோன்பு ஸ்ரீராமநவமி பூஜா கல்பங்கள் | 0 | 37 | 0 | 8 |
| 6 | ஸ்ரீ கோகுலாஷ்டமி | 0 | 31 | 0 | 8 |
| 7 | ஸங்க்ராந்தி பூஜை .... | 0 | 25 | 0 | 8 |
| 8 | துளஸீ பூஜை .... .... | 0 | 31 | 0 | 8 |
| 9 | துர்காலக்ஷ்மீ ஸரஸ்வதி பூஜை | 0 | 37 | 0 | 10 |
| 10 | ஸுப்ரமண்ய பூஜை .... | 0 | 50 | 0 | 10 |
| 11 | சிவராத்ரி பூஜை ... .... | 0 | 31 | 0 | 8 |
| 12 | காவேரீ பூஜை .... .... | 0 | 19 | 0 | 8 |
| 13 | சனிவார வேங்கடேச பூஜை .... | 0 | 25 | 0 | 8 |
| 14 | ஸ்ரீமஹிஷாஸுரமர்தினீ ஸ்தோத்ரம் | 0 | 25 | 0 | 8 |
| 15 | ஆபஸ்தம்ப ஸூத்ர தர்ப்பண விளக்கம் | 0 | 75 | 0 | 10 |
| 16 | ஸ்ரீ துலா புராணம்.... .... | 2 | 50 | 0 | 25 |

கிடைக்குமிடம் :—

ஆசிரியர், ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா,

"மாம்பலம் குருகுலம்,"

2, ஸ்டேஷன் ரோடு, W. மாம்பலம்,

சென்னை-33.

சீர்காழி ஸ்ரீ மீனாக்ஷி பிரஸில் அச்சிடப்பட்டது. கா. 2000.